கண்ணனிவ் வுதவிமுன் காட்ட வானவ
ரெண்ணருங் கடல்கடைந் திட்ட போழ்தினின்
மண்ணினிற் றுகள்கடி மாறு கைக்கொடு
துண்ணென வெழுந்ததிற் றவ்வை தோன்றினள். (கo)

தோன்றிய பின்புயர் துரக மாமணி
யான்றதன் பின்பயி ராவ தம்வர
வேன்றதி லிரண்டையு மிந்தி ரற்களித்
தூன்றரு மணியரிக் குவப்போ டீந்தனர். (கக)

வேறு.

பின்னு மாயிர மாண்டு பெருங்கட
றன்னை மாய்ப்பத் * தனுவந் தரியதின்
மன்னு மாயு மறைவடி வாகிமா
லென்ன வந்தனன் யாவையுங் காக்கவே. (கஉ)

ஆய தற்கு நெடுநா ளகன்றபின்
றாய மிக்க வணிக ளெங்கிடத்
தேய மெண்ணுந் திருமக டோன்றியே
மாய வன்றிரு மார்பையு மன்னினுள். (கஙு)

ஆங்க தன்பி னமரர்க ளாருயிர்
நீங்கி மீள நிகழ்ந்தன வென்னவே
தாங்க ரும்பெரும் பாற்கட றன்னினின்
றோங்க ருஞ்சீ ரமுத முதித்ததால். (கச)

வேறு.

எழுந்திடு மமுதை மாயத் தெடுத்தரி யவுணர்க் கீயா
தொழிந்தடல் வானோர்க் கீய வும்பரு மதனை வாங்கி
யழுந்திய வமுதை வேறோர் பொற்குடத் தடக்கி நெக்கி
விழுந்திற லமுதிற் றூமும் பருகினர் வேறு வேறு. (கரு)

* தன்வந்தரி—தேவவைத்யன்.

பருகியே மிக்கி ருந்த வமுதினைப் பகுத்து வாங்கி
யொருகுடத் தடைத்துச் சேமித் தொருவரு மடரா வண்ணம்
வருகுட மிரண்டு மொக்க வாயுவின் கைக்கொ டுப்ப
வருகுவின் றவனும் வாங்கி யமருல கடைவா ஞக. (கசு)

படியினின் றுலவை வேந்து மவுணர்கள் பாரா வண்ண
நொடியினி லெழுந்து வானோர் நுகர்பதிக் கேகும் போதின்
முடிவிலா மேன்மை பூண்ட மறைசையம் முதுப திக்கே
கடினமா மமுத கும்பம் வீழ்ந்தது கையிற் சாறி. (கஎ)

## வேறு.

அற்று வீழ்ந்த வமுதமு மங்ஙனம்
பற்றி லிங்க வடிவாய்ப் பலித்திட
மற்று நோக்கியவ் வாயுவு மாதுய
ருற்று நின்றன னேவிய மென்னவே. (கஅ)

ஆங்க தன்பி னமரரு மாலுடன்
பாங்கி னுலப் பதியணு கித்துய
ரோங்கி நிற்கு மருத்தையு முற்றவன்
ருங்கு கும்பந் தகர்ந்ததுங் கண்டனர். (கக)

மாய னீதுகண் டப்போதவ் வாயுவை
நீயு மித்துயர் நீங்கிங் கருட்குறி
யாய திந்த வமுத மமரரும்
வாயு வின்பா லபராத மாற்றுமின். (உ௦)

## வேறு,

உம்பரீ ருலவை தன்னால் வந்ததின் றுலக முய்ய
வெம்பிரான் மறைசை வாழு மிறையவ னருளால் வீழ்ந்தின்
றம்பொ னீ டமுத கும்பஞ் சிவலிங்க மாய தாமாற்
கொம்புத லொழிக மற்றோ ரிடத்தினுங் குற்ற மின்றால். (உக)

சொல்லிலிவ் வமுதா னுங்கட் காவது துயல் *வேர் வாதி
யல்லனீங் கிடுதெ லென்று லாங்கது விசிட்ட மாமிவ்
வெல்லைசே ரமுத லிங்க மின்றுநீ ரிறைஞ்சப் பெற்று
லொல்லையி லவைதா மன்றி யுதவிடு வினைந்த வெல்லாம். (உஉ)

வேறு.

ஆத லாலிவற் காலயம் போற்றுமென்
றோத மாதவ னும்பருங் கேட்டுடன்
காத லாற்றெய்வ கம்மிய ரைக்கொடு
தீதி லாலயஞ் செய்துமு டித்தனர். (உங)

அந்த வாலயந் தன்னி லமுதமே
தந்த லிங்கந் தனையா தரவினுன்
முந்து சைவா கமத்து முறைகொடு
சிந்தை கொண்டங் கருச்சனை செய்துபின். (உச)

விண்ணு ளோரு மமுதொரு மேனியாய்
நண்ணு மீசனை நாடியு ளங்கொடய்
வண்ண னின்றெதிர் மாமறை யின்வழி
யெண்ண ருஞ்சொற் றுதிகொ டிறைஞ்சினர். (உரு)

இறைஞ்சி நின்ற விமையவர்க் கின்னமு
துறைந்த சோதி யுருக்கொடு நின்றெதிர்
சிறந்த வன்பொடத் தேவரை நோக்கிநல்
லறந்த ருந்திரு வாக்கொன் றருள்செய்வான். (உசு)

அலகி லுமை நமக்கமு தேசனித்
தலம டைந்தவர் தாமருள் சார்வதற்
கிலகி யாமிங் கிருப்ப மிருத்தலா
லுலகி லீது முருத்திர கோடியே. (உஎ)

* வேர்வு—கோபம்.

ஓது மிந்த வுருத்திர கோடியின்
மீது லாங்கட ரேய்ந்தெமை வேண்டினர்க்
கேத நீக்கியின் றீந்தின்ப முத்தியிம்
மாத லத்திலெக் காலமும் வைகுவம். (உஅ)

## வேறு.

அண்டர் நீரெமக் களித்திடு பூசையுந் துதியுங்
கண்டி யாமிக மகிழ்ந்தனங் காதலித் துமதுட்
கொண்ட நீள்வர முளதெனிற் கூறுமி னென்று
தொண்டர் நாயக னருளவவ் வானவர் சொல்வார். (உக)

அமுத நாயக நின்னிடத் துறவுமன் பவுணர்
தமது வாதையென் றுறுமலுந் தடிந்துவேர் வாதி
யெமது தம்பதத் திடருறு திருப்பவு மெமக்கின்
றுமது நீடரு ளுதவுமென் றும்பர்பின் றுதைத்தார். (௩0)

அண்ண றானுமங் கதற்குடன் பாடுசெய் தருள
விண்ணு ளோர்களு மாயனும் வேதநா தனையு
நண்ணி யேத்தியின் றமரரு நணுகினர் வான
மெண்ண ரும்புகழ் வைகுண்ட மெய்தினன் மாலும். (௩க)

அந்த நாண்முத லமுதலிங் கத்திட மாக
வெந்தை தானுமவ் வுருத்திர கோடியி லென்றும்
வந்து மூழ்கியே வணங்கினர்க் கின்னருள் வழங்கி
முந்து மாலயத் தமர்ந்தனன் மூதுல குய்ய. (௩உ)

## வேறு.

உழையொரு கரத்தி லேந்தி யுபெதி முடியு லாவி
யழகெறித் திலங்கு கின்ற வமுதேசன் றனக்கு மீள
விழையுமத் திருநா மத்தை யின்றியு மிருநி லத்திற்
குழகனென் றுரைக்கு நாமங்கொண்டமை குறித்துரைப்பாம். (௩௩

முன்னொரு சுவேத னென்னு முனிவனற் சுசீலை யென்னுந்
தன்னியற் றலைவி கூடக் குளகனுந் தனய னோடு
நன்னலந் தழைத்து நீடு நன்மதா நதியின் றீர
மன்னிசின் றனந்த காலம் வருந்தின னருந்த வங்கள். (௩௪)

பெருந்தவ மியற்று நாளிற் பேசுநன் மதையின் றீரம்
பொருந்திய வவனி மாரி பொழிந்திடா தங்க ணுள்ளோ
ரருந்துவ தின்றி மற்றோ ரவனிசென் றணுக வங்க
ணிருந்திடு சுவேதன் றானு மெண்ணின னிதற்கே தென்று. (௩௫)

திங்கண்மும் மாரி தூவச் செழித்திரு மூன்று காலம்
பொங்கிய சாக மூல பலங்களு மொருங்கே பொங்குந்
துங்கமா மறைவ னத்திற் சொற்றரு மகத்தி யன்றன்
றங்குமாச் சிரம நன்றென் றனைவருஞ் சாற்றக் கேட்டான். (௩௬)

கொண்டுதென் றிசையை நோக்கிச் சுவேதனுங் குடும்பங் கூட
வண்டருந் தவத்தான் மிக்க வயுதமா முனிவர் சூழ
வெண்டரு நாடுங் காடு மலைகளு மிடையி லுள்ள
மண்டல மனைத்து நீங்கி மறைவன மருங்கு வந்தான். (௩௭)

பகருமப் பதியில் வேதா கமங்களே பயின்று நாளு
மிகலுட னுசை நீக்கி யிருந்தவம் புரிந்து மிற்கு
மகிலமா முனிவர் சூழ வகத்திய முனிவன் றங்கு
மிகரிலாத் தபோவ னத்தின் வளஞ்சில மிகழ்த்து வாமால். (௩௮)

இடம்பெறு கல்வி யென்னு மிரும்பொரு ளீத லானும்
படர்ந்தமெய்ஞ் ஞான மென்னும் பன்மணி விளைத்த லானு
மடங்கலும் பரமா னந்த வமுதினை யுதவ லானுந்
தடங்கட லென்ன வோங்குஞ் சாற்றுமத் தபோவ னந்தான். (௩௯)

## வேறு.

சூத மீதலால் வடுவில சூழ்ந்தரு வாசை
மாதி ரத்தலா தாங்கில வயிரமுங் கவடும்
பாத[வத்தலான் மற்றில படர்களி மயக்க
மோது வண்டினத் தன்றிமற் றோரிடத் திலதால். (சo)

தாய கன்றிடத் தனித்தவான் கன்றினிற் றயைவைத்
தேய ரும்புலி மூலைசுரந் தின்னமு தருத்துங்
காய வெங்கதிர் கனன்றுலை கடும்பணிப் பார்ப்பி
னேய முற்றுயின் றிறகினு னிழலிடுங் கலுழன். (சக)

கான வெம்பெருங் களிற்றிளங் கன்றினுக் குகந்தை
யான னங்களு முலவைதீர்த் தளித்திடு மன்றி
மானி னங்களும் வேங்கையும் வந்தொரு துறையிற்
றூன ருந்துநீர் தண்புனற் றுறைதொறு மங்கண். (சஉ)

ஈட்டு மாதவர் பயின்றிடு மிரும்பெரு மறைநூல்
கேட்டு நாளுமங் கயலுறை கிள்ளையி னினங்கள்
மீட்ட தன்பொருட் டொகுதியை விரும்பிமற் றயல்வாழ்
சோட்டு நீடிய பூவையின் குலங்களுக் குதவும். (ச௩)

மற்று மாங்குறு தருக்கள்கீழ் வளர்த்தி யசாயை
சுற்று வேரியம் புனலிடைத் தோற்றிய காட்சி
யுற்ற மாதவர் பாதமே லாயுறுந் தவத்தைப்
பற்றி யத்தருக் குலங்களும் பயில்வன நிகர்க்கும். (சச)

விலங்க லின்னடித் தாழ்வரை விடுத்துமா மதுநீர்
துலங்கு மென்மலர் தூவிவீழ் கொடிகளின் றேற்ற
மிலங்கு மாதவ ரருச்சனை யியற்றுதல் கண்டு
பொலங்கொள் பூசனை தாங்களும் புரிவன போலும். (ச௫)

ஆன மாதவர்க் குறுகிழங் ககழ்வன கேழல்
வான ரங்களுங் காய்கனி கொணர்வன மற்றுந்
தூந றுங்குசை சமிதைகள் சுமப்பன கயங்க
டேனி ருல்கொடு சேர்வைசெய் திடுவன கரடி. (சசு)

ஆய வப்பெருந் தபோவன மடங்கலு நிரையே
காய்வ தற்கென விரித்தவற் கலைய தன் காட்சி
நேய முற்றவத் தபோதனர் நினைந்திடு முள்ளத்
தூய்மை யைப்புறத் தேறவுந் தோற்றுவசிவனும். (சஎ)

நீட ருந்துயர்ச் சிற்றின்ப நேமியுட் பட்டு
வாடி டாதுநற் பேரின்ப வாழ்வினை வேண்டி
ஞடு மித்தபோ வனமென நாளிலத் தோரைக்
கோட ரந்தொறு மிருந்திருந் தழைப்பன குயில்கள். (சஅ)

சீத வண்புனல் வாவியிற் சிறந்தலர் கமலத்
தோதி மங்கள்சென் றிருந்திருந் துறங்குமக் காட்சி
மாத வத்தின ரருந்தவம் வயங்குநற் பதும
வாத னத்திருந் தியற்றிடு மந்நெறி நிகர்க்கும். (சகு)

வேறு.

அன்றி மாதவர் மைந்தரை யானனக்
கன்று தன்பிடர் பற்றிக் கரங்களாற்
சென்றி ழுக்கவு மேறவுஞ் சீற்றமென்
றொன்று மற்றங் குடன்விளை யாடுமால். (ருo)

தாவ ருஞ்சீர்த் தபோதனர் கன்னிய
ராவ லாய்வளர்த் தாக்க *லர் வாடிகைக்
கேவல் செய்வ கயங்க ளதற்கிருங்
காவல் செய்வ புலியின் கணங்களே. (ருக)

---

* அலர்வாடிகை—பூந்தோட்டம்.

ஓம வேள்வி யுதவும் புகையினு
லாமி ராப்பக லங்க ணிருந்தவர்
தாம ணிந்தவெண் ணீற்றெளி தன்னினு
* லேம மும்பக லாய்கின் றிலங்கிடும். (ருஉ)

வேறு.

முறைமுறை தோகைகண் முயங்கு வேள்வியிற்
சிறைகொடங் கெழுப்புமாஞ் செய்ய வெங்கனன்
மறையொலி மருங்கெலாம் வயங்கு மவ்வன
நிறைபுனன் முகிறருகீனைந்த போதெலாம். (ருங)

வேறு.

இனைய நல்வளம் பொருந்திய விரும்பெருந் தமிழ்தேர்
முனிவன் வைகுமத் தபோவன மெனுமுது மறைசை
தனைய டைந்தனன் சுவேதனுஞ் சாற்றுமத் தவத்தோ
ரனைவர் தம்மொடு மணையுமுன் னுங்கது கேளீர். (ருச)

எதிரெ முந்துசென் றிருந்தமிழ் முனிவனு மவனை
முதிருநல்வரத் திசைத்துடன் முறைமுறை பூசை
விதிய ளித்துமா மறைசையுள் விமலனைப் பணிவித்
ததின னந்தர மவருடன் றபோவன மடைந்தான். (ருரு)

இருத்தி யாங்கவர்க் கிருங்கனி காய்கிழங் கிவைமுன்
றிருத்தி வேறுவே றவரவ ரரும்பசி தீர
வருத்து வித்துவேண் டுவவதன் பின்பவர் தாங்கள்
பரித்தி டும்படிக் களித்தனன் பன்னசா லைகளும். (ருசு)

இன்ன வாறருந் தமிழ்முனி யுபகரித் திடமற்
றன்ன மாதவ ருறும்பசிநோயுள தகற்றி
மன்னி நற்றவ மாங்குயர் மறைவன நாதன்
றன்னை யும்பணிந் தமர்ந்தனர் தகநெடுங் காலம். (ருஎ)

---

* ஏமம்—இரவு.

அன்ன மாதவர் தனிற்சில ரணுகுறச் சுவேத
னென்னு மாதவன் குடும்பமோ டேகியே தென்பான்
மன்னு கோடிநீ டமுதலிங் கேசர்முன் வகுத்துப்
பன்ன சாலையாங் கிருந்தனன் பரித்தருந் தவங்கள். (ருஅ)

வைகு நாளிலம் மாதவன் மைந்தனுங் குளக
னுய்கு மாறுளந் துறுந்தமு தேசனை யுவந்து
பொய்க டிந்தபே ரன்பினுன் மானத பூசை
செய்க வுன்னினன் யாவர்க்குஞ் செய்வதற் கரிதை. (ருசு)

அன்ன வன்புரிந் திடுமடை வமுதலிங் கத்தின்
முன்னி ருந்தனு தினம்புலன் முழுதையு மடக்கித்
தன்னு ளம்பரி சாரக ணுக்கியே சமாதி
மன்னி நீடரி யாசனங் கயிலையா வகுத்தான். (சுo)

வேறு.

மதிகொடு பாத்தி ரங்கள் சேடன்மா மகுட மாகப்
பதிவுறு மதனை யாதி கச்சபம் பரிப்ப தாக்கிக்
கதிதரு யமுனை சந்திர பாகைகா வேரி யென்னு
நதியினைப் பாத்தி யாச மனமருக் கியமா நாட்டி. (சுக)

அந்தமின் மஞ்ச னங்கள் கங்கைநீ ராக வாட்டிச்
சிந்தைகொண்டாடையாகத்திசைகளெட் டினையுஞ்சேர்த்திச்
சந்திரன் கந்த மாக வலர்கடா ரகைக ளாகக்
கந்தநீண் மாலை யாகச் சாத்திவான் கங்கை தன்னை. (சுஉ)

வரிக்குமுப் புரிநூ லாக வாசுகி மற்ற நாகந்
தரிக்குநற் குண்ட லங்க ளங்கதம் வளைதா ளுகப்
பரிக்குமா பரண முற்றும் பரிதிபன் னிருவ ராகத்
தெரிக்குநீ டுப மேகங் கோள்களே தீப மாக. (சுங)

உலகமீ ரேழு மன்ன மாகவவ் வுலகிற் றோன்று
மலகில்வான் பயன னைத்து மளவில்வெஞ் சனமே யாக
விலகுவா ரிதிக ளேழு மினியவான் பால தாகக்
குலவரை யனைத்தும் பேதங் கொண்டிடு மபூப மாக. (சுச)

சிமையநீ ணதிமற் றெல்லாம் பானீய மாகச் சிந்தித்
தமைவிளும் பூல மாக வரதன மளவில் வான
மிமைகொள்கண் ணுடி யாக விலங்குவெண் சவரி தானே
* சமரிக ளாக வாயுத் தாலவட் டங்களாக. (சுரு)

இந்தவா றருச்ச னைக்காங் காயவை யெல்லாங் கற்பித்
தந்தரி யாக பூசை யனுதின மவனி யற்றிச்
சிந்தைகொண் டமுத மீன்ற செய்யமா மணியை யன்பால்
வந்தனை செய்து நின்று துதித்தனன் மகிழ்ச்சி பொங்க. (சுசு)

வேறு.

சங்கர விமல நிராமய வனந்த வானந்தத் தாண்டவ வுரக
கங்கண பரம பராபர நீல கண்டகங் காதர வதுல
புங்கவ வமுதத் தாண்டெழு வரத புராந்தக திகம்பர புனித
வங்கண போற்றி நின்சர ணடைந்த வடியனையாண்டருள்புரியே. ()

என்றவன் றுதிப்ப மகிழ்ந்துட னமுத விலிங்கமா யிருந்திடு பரம
னன்றவன் றனக்கு வெளியிலே காட்சி யளித்திட வதிசயித் தவனுந்
துன்றுமெய்ப் புளகம் விழிகளா னந்தஞ் சொரிதரப் பரவச ளுகி
நின்றெனை யுகந்தாண்டருடருகென்றுநிகழ்த்தினனந்தநிருத்தம.

வேறு.

அன்ன வன்றனை யரன்றிருக் கரங்களா லணைத்து
நின்னு ளந்தரு பூசையான் மகிழ்ந்தன னினக்கின்
றென்ன நல்வரம் வேண்டினு மிம்புகென் றியம்ப
முன்ன வன்றனைத் தொழுதெதிர் குளகனுமொழிவான். (சுஎ)

* சமரி—பாம்பு.

பத்தி யென்றுநின் பதாம்புயம் பற்றவு மென்பேர்
வைத்து நின்பெயர் வழங்கவு மயுதமா தவரு
முத்த யானுமென் றந்தையு் மூவந்தினி திருக்கு
மெத்த லத்தினுங் கரிப்பெனு மிடருறு திடவும். (எ0)

இனைய நல்வரம் வேண்டிட வளித்திறை யேகச்
சனக னம்மனை தன்னுடன் குளகனுந் தவஞ்செய்
முனிவர் சூழ்தரத் திங்கண்மும் மாரியே முயங்க
வினிதி ருந்தனன் கரிப்பெனு மிடருறு தங்கண். (எக)

குழகன் வேண்டுகோ ளாற்குள கேசனெ ன்றுலகில்
விழைகொ ளுமமே விரவுமவ் விறையவன் மேன்மை
கழறு கின்றவர் கேட்பவர் கரிசெலா மறுத்து
வுழைக ரன்பர பதமுமே லுறுவர் துண்மை. (எஉ)

குளகேசச்சருக்க முற்றிற்று.

ஆகச் சருக்கம் கடு-க்குத் திருவிருத்தம்-க0கசு

---

## தனபாலச் சருக்கம்.



புரிதரு மமுத மேனி பொருந்திய குளகர் மேன்மை
பரிவுகொ டறிந்த வண்ணம் பகர்ந்தனந் தனத னுக்குத்
தெரிதரு மமைச்சாந் தன்மை திகழ்தன பால னங்கட்
கரியுரு வான சாபந் தீர்ந்தமை கழற லுற்றும். (க)

சாற்றின்முன் னளகை தன்னிற் றனதனுக் கறிவு ணர்த்து
மேற்றமா மியக்கர் தம்முட் டன்பால னென்னும் பேராற்
போற்றரு மொருவன் வேந்துக் குறும்பொருள் புகன்று நாளு
நாற்றிசை புகழச் செல்வ நலம்பெற நடக்கு நாளில். (உ)

வேறு

அன்னவனு மப்பதிய ரம்பையரின் மிக்கா
ளென்னவுல கேத்துகிரு தாசியெனும் வேசி
தன்னின்மிகு காதல்கொடு சற்றுமக லாமற்
றுன்னமளி யூடவளொ டின்பமது துய்த்தான். (ங)

ஆங்கவனு மிப்பரிச ளப்பரிய போகத்
தோங்குநெடு நாள்செலவு மோர்கணம தென்றே
நீங்கரிய காதல்கொடு நின்றளகை யாளி
பாங்குபெறு தாளிணைப ணிந்திலனி ருந்தான். (ச)

வேறு.

இந்த வாறவ னிருப்பவவ் விறைவனு மழைத்தாங்
கந்த மில்பெருங் கோபமுற் றவன்றனை நெடுநாள்
வந்து ளுதுநீள் போகமே மன்னினை யதனுற்
றந்தி யாகிநீ யவனிமேற் போகெனச் சபித்தான். (ரு)

அன்று சாபமிட் டருளிய வளகையாள் வேந்தைச்
சென்று தாழ்ந்துட னமைச்சனுஞ் செப்புவான் யானின்
றென்று செய்பிழை பொறுத்தெனை யுற்றவிச் சாப
மென்று நீங்கிடு மெனக்கருள் புரிதியென் றிசைத்தான். (கூ)

என்னு மத்தன பாலனுக் கரசனு மிரங்கி
யுன்னு நீடறி வுடன்கரி யுருக்கொடு புவியின்
மன்னி வேதகா னனமுறை வள்ளலை வழுத்திற்
பன்னி ரண்டியாண் டளவிலிப் பழியறு மென்றான். (எ)

சாற்று முன்றன பாலனுந் தந்தியி னுருவாய்த்
தோற்றி நின்றவத் தந்தியுஞ் சுருதிகா னனத்தில்
வீற்றி ருந்திடு வள்ளலை வேண்டிவெஞ் சாப
மாற்றி டும்படிக் கறிவுகொண் டடைந்ததம் மறைசை. (அ)

மறைசை யம்பதி வந்துமா தங்கமும் வாரித்
துறைப டிந்துசென் றவ்வனச் சூழல்புக் கங்கண்
முறைமை யாவையுங் கண்டுள மகிழ்ந்துமூ தறிவா
விறைவ னைப்பணிந் தமர்ந்ததங் கிருந்தவம் புரிவான். (கூ)

## வேறு.

காலையி லெழுஞ்செலுங் கடலின் மூழ்கிடுஞ்
சாலுநீள் வனத்தினுந் தடாகந் தன்னினு
மேலவார் மலர்கனி யெடுக்கு மேந்திடுங்
கோலுநீர் துதிக்கையிற் கொடுவ ரும்புகும். (க௦)

புகுந்தர னாலய முன்னர்ப் போய்ப்பலி
பகுந்திடு பீடமேற் பகரு நான்மறை
யுகந்திடு மிலிங்கமென் றுண்ணி னைந்ததிற்
றகுந்திக ழருச்சனை தரிக்கு நாடொறும். (கக)

ஈட்டத னருச்சனை யடைவி சைக்கினீ
ராட்டிடுந் துதிக்கைகொண் டடர்ந்து சந்தகிற்
கோட்டினை கொடுதருங் குளிர்ந்த பங்கயத்
தோட்டலர் முதன்மலர் சொரியு மன்புடன். (கஉ)

கானுகுங் குக்கிலாற் றூபங் காட்டிடுந்
தானுகு மணிகளாற் றீபந் தாங்கிடும்
போனக மாய்க்கனி பலபு குத்திடு
மானத மாய்ச்செப நெறிவ குத்திடும். (கரு)

## வேறு.

துதிக்கை கூப்பு மிரங்குந் தொழுமெழுங்
குதித்து நாதங் கொடுமுழ வேற்றிடு
மதிக்கு நிற்கும் வலம்வரு மன்பின்மெய்
விதிர்க்கு மானந்த வாரி விடுத்திடும். (க௬

### வேறு.

இந்த வாறருச் சனைசெயப் பன்னிரண் டாண்டிற்
றந்தி யாமுரு வகன்றுமுன் போற்றன பால
னந்த நல்லுரு வாகவாங் கவனுமம் மறைசை
யெந்தை தாள்பணிந் தேறின னெழில்புனை விமானம். (கரு)

போந்த னன்னள காபுரி புகன்றவப் புரியின்
வேந்த னைப்பணிந் தவனருள் முன்பினும் வேண்டி
யாந்த குந்திற லமைச்சனு மளவருஞ் செல்வத்
தேந்து கொங்கைநன் மாதரோ டின்பமுற் றிருந்தான். (கசூ)

### வேறு.

ஆதவினு கந்துதன பாலனருள் பெற்ற
காதையுரை செய்தவர்கள் கேட்பவர்களிப்பா
லோதரிய வெம்பழியொ ழித்துலகி லின்புற்
றேதமில்ப ரம்பொருளொ டின்புறுவ ரென்றும். (கஎ)

தனபாலச்சருக்க முற்றிற்று.

ஆகச் சருக்கம் கசா-க்குத் திருவிருத்தம்-க௦ங௩.

---

## தேவர்தொழுமன்றச் சருக்கம்.

ஓவரு மத்த லத்துட் டனபால னுகந்து சென்று
தாவருஞ் சாபந் தீர்த்த லறிந்தமை சாற்றி னேமாற்
பூவல யத்து ளீரெட் டாகமுன் புகலு மன்றுட்
டேவர்கள் பணியு மன்றீ தாயது தெரித்தல் செய்வாம். (க)

தோற்றிடு முயிர்கட் கெல்லா வினைந்திடிற் றுதிக்கிற் காணி
லேற்றமா முத்தி நல்கும் பரமரா சியமா யார்க்கும்
போற்றரு நடன மீசன் புரிவதற் கிடம தாகச்
சாற்றுமம் பலங்க ளெண்ணிற் றரையினு ளீரெட்டாமால். (உ)

ஆங்கதின் முதலா மன்றந் தில்லைமன் றதற்கு மேலைப்
பாங்கரின் மேலாஞ் சிற்றம் பலமெனு மிரண்டா மன்ற
மோங்கதன் குடபா லாக யோசனை யைந்துக் கப்பாற்
ருங்கருங் குடந்தை மூன்ருஞ் சபையெனச் சாற்ரு விற்பர். (௩)

அன்னதன் றென்பா லாக வையரை யோச னைப்பாற்
கன்னகுப் பசமென் ருேதுங் கருதரு நாலா மன்ற
நன்னக ரதன்றன் கீழ்பா ஞலரை யோச னைக்கே
மன்னிய வெண்கா டைந்தா மன்றதன் வடபா லாக. (௪)

ஒன்றினுக் கற்ப நூன முற்றயோ சனையி லாரு
மன்றமா வயங்கு காளி புரமதன் மருங்கு பாத
வின்றயோ சனையிற் கீழ்பா னேமியங் கரையின் மேல்பாற்
பின்றகு மேழா மன்றம் பிரவேசி னியதன் றென்பால். (௫)

## வேறு.

ஆங்கொ ரற்ப மருகிய யோசனைப்
பாங்கர் மாறன் பொடிபடப் பார்த்தரன்
ருங்கு சம்புவி னேதமென் றேசக
மோங்கு மன்றமெட் டாவதென் ருேதுப. (௬)

அன்ன தன்றென் புறத்தரை யோசனை
தன்னி லொன்பான் றகுங்கால நாசினி
யென்னு மன்ற மிதன்வாயு மூலையிற்
பன்ன ருஞ்சொற் குரோசனை பாதியில். (௭)

பாவ நாசினி யென்று பரவுபத்
தாவ தாமன் றதன்மேற் கருகய
லோவ ருஞ்சுப் பிராந்தமென் றேதுப
தாவ ரும்பதி ேைராஞ் சபையது. (அ)

தெரித்த தன்கீழ்ப் புறத்தடை தென்றிசை
தரித்த யோசனை மூன்றரை தன்னினு
லுரைத்த மன்றுகா ரோண மதற்குமேன்
முரித்த தென்றிசை யோசனை மூன்றினில். (௯)

வேறு.

செறிதரு மறைசை தானே தேவர்போற் றிடுமன் றென்று
நிறைதரு பன்மூன் றுக நிகழ்த்துமா மன்ற மற்ற
முறைதரு மன்ற மூன்று மொழிவதற் குண்மை யாக
வறிகில னறிவர் வேத மறிந்தவ ரறியா ரல்லோர். (க0)

ஆரண வனமற் றிப்பாற் றேவர்வாழ் மன்ற மாய
காரண மெவ்வா றெந்தக் காலமோ வென்னின் முன்னுட்
டாரணி துன்பஞ் செய்யு மிரணியன் றன்னைச் சாட
நாரண னுர சிங்க வடிவினை நண்ணு நாளில். (கக)

வேறு.

அன்று தன்னுட னெதிர்த்திடு மிரணியனுவி
கொன்ற வன்றன துதிரமே குடித்துடல் களித்து
நின்ற கந்தைகொண் டெமையலா னீடுலகத்தி
லொன்று மேம்படு பொருளிலை யென்றுளங் கொண்டான். (கஉ)

ஆசின் மாயனு மகம்பிர மங்கொடங் கயனை
வாச வன்முத லமரரை வம்மினென் றழைத்துப்
பேசி னுந்தமக் கேத்தரும் பெரும்பொருள் யாமே
தேச மீதினி லெமையலா திலையொரு தெய்வம். (கரு)

ஆதலா லெமை வணங்குமி னகிலதே வதைக்கு
நாத ஞமலா தயலிலை நவிற்றிடி னுலக
மீதி னீருறும் பதங்களை வேண்டிடி னமது
பாத மேகதி யென்றெமைப் பற்றுமி னென்றான். (கச)

என்ற மாயனை நான்முக னகைத்தெதிர் நோக்கி
நன்று நன்றுநீர் நவின்றதிங் குமக்குநந் தமக்கு
மன்றி வானவர் தானவ ரனைவர்க டமக்கு
நின்ற நீடுல கங்களாம் நிகழ்த்துமற் றினுக்கும். (கரு)

தலைவ னாகிநின் றனைத்தையு மொழிக்கவுந் தரவு
மலகில் போகமு மருந்தவு மருத்தவு மவனே
வலவ னாகிநின் றியாவரும் வணங்குறுந் தெய்வ
முலக மீதினிற் சிவனலா துரைக்கில்வே றுளதோ. (கசு)

எனவு ரைப்பநின் றயனதை நரவரி யெண்ணு
மனம திற்றனை யலாதுமே லிலையென மதித்தன்
றனைவர் தம்மையுந் தம்புய வலிகொடங் காள
நினைவு கொண்டனன் கண்டதை நீள்சடை யோனும். (கஎ)

பரவி டாதமுற் றக்கனை வதைத்தவப் படிபோற்
சரப ரூபம தெடுத்துட னரவரி தாங்கு
முருவு தன்னுட னகந்தையு மொழித்தன னப்போ
தரியு மவ்வறி யாமைவிட் டவ்வுரு வகன்றான். (கஅ)

ஆதி யாகிய தலைவனன் றரனென வறியும்
போத முற்றுநின் றிப்பிழை பொறுத்தரு ளென்றம்
மாத வன்சிவ னடியிணை வணங்கியுச் சியிற்றன்
மீதி லஞ்சலி கூப்பியே வெருவிநின் றுரைப்பான். (ககூ)

### வேறு.

அரகர பரம சிவசிவ வானந்த தாண்டவ விமல
புரகர சரத விடதர வகண்ட பூரண பராபர புனித
வரகரி யுரிவை புரிதரு வரத மனோகர சங்கர பிரம
சிரகர வகில புவனமும் பணிபுந் தேவனே தேவநா யகனே. (உ0)

என்றவன் போற்றச் சரபமா யரனு மெடுத்திடு முருவினை மாற்றி
நின்றிட வரியு மயனுமிந் திராதி நிகழ்த்திய விமையவர் முற்றுஞ்
சென்றடி பரவ வருள்கொடுத் தகில தேவர்க டம்மொடுங் கூட
வன்றர னணைந்தானும்பரோ டிம்ப ரருள்பெற மறைசையம் பதியை.

### வேறு.

சேனையுட னத்தலம டைந்துதிரு மூலட்
டானமுறு வள்ளறிகழ் சன்னிதியின் முன்ன
ரானதொரு மன்றுடன மைத்திறையு மங்கண்
வானவர்கள் காணநட னத்தொழில்வ குத்தான். (உஉ)

சித்தரொடு சாரணரி யக்கர்திசை யாளர்
மெய்த்தவர்க ணங்கண்முதல் வேதமயன் மாலும்
பத்திகொடி றைஞ்சவுமை பற்றியிடு தாளத்
தொத்தறமி தித்துநட மிட்டனனு கந்தே. (உ௩)

பந்தமற முத்திநெறி பற்றவம ரர்க்கா
னந்தநட மிவ்வணந டித்தருளி நாதன்
சந்தவன மீதமரர் தம்மையு மிருந்தே
யிந்தவகை நாடொறுமி றைஞ்சுநட மென்றான். (உ௪)

என்னமறை சைப்பதியு ளெண்ணருமி லிங்கந்
தன்னையுமவ் வானவர்த னித்தனியி ருத்திப்
பன்னருமருச்சனைப ரித்துமிக நாளு
நன்னடன முந்தொழுதி ருந்தனர்ந யப்பால். (உ௫)

அன்றுமுதல் வானவர்கள் சேவைபுக வங்க
ணின்றமர்த லான்மறைசை நீடமரர் போற்று
மன்றமெனு நாமமும்வ ரித்ததிலம் மாய
ஞென்றுறவி ருத்துசிவ லிங்கமது கந்தே. (உசு)

கண்டவர்கள் மாலொடுகெ லந்திடுவர் வேதன்
கண்டசிவ லிங்கமது காணிலவ ஞவர்
கண்டிடினு மும்பர்பதி கண்டசிவ லிங்கங்
கண்டிடுவ ரும்பரொடு காணரிய போகம். (உஎ)

தினகரனி லிங்கமிக வும்பெருமை செய்யுங்
கனலவனி லிங்கமது காணிலொளி காட்டு
மனிலவனி லிங்கமுர மாக்குமறை யங்கண்
மனுதருமி லிங்கமுயர் கல்விவர வைக்கும். (உஅ)

மற்றவிமை யோர்மறைசை வைத்தசிவ லிங்க
முற்றவரு நீடுபுக ழுற்றவர்ப தங்கள்
பெற்றிடுவ ரொத்தறமி தித்தபெரு மானைப்
பற்றினர்க ளற்றிடுவர் பாவமுள வெல்லாம். (உகு)

வேறு.

திங்க டிங்களிற் றேய்பிறை யட்டமி தினத்தவ்
வங்க ணன்பதங் காண்கினு மன்றியே மாசி
தங்கி டுங்குகு தினத்தினிற் றடங்கட லாடிப்
பொங்கு மன்னடங் காண்கினும் பொருந்துவர் முத்தி. (௩0)

மாசி தங்கிய மகமுறை யுவாவினீ ராடிப்
பேசு மத்திரு நடம்புரி பிரானடி கண்டோ
ராசை யுற்றநற் போகமா யுளவெலா மருந்தித்
தேசு பெற்றநற் சிவனொடொன் றுகுவர் திண்ணம். (௩க)

### வேறு.

எப்படித் தில்லை மன்று ளிறைவனைக் காண்கின் முத்தி
யப்படி யாகு மிந்தத் தேவர்மன் றரனைக் காண்கின்
மெய்ப்படு மின்ப முத்தி வேண்டின ராத லாலே
யொப்பறு மன்பாற் காண்கவொத்தற மிதித்தோன் பாதம். (௫௨)

நீடுமெத் திருவெல் லைக்கு ணிருதியி லவுணர் மாயச்
சாடுதற் கங்கண் வைகுஞ் *சருச்சிகை யென்னு நாம
மோடியங் கவளோ டண்ணன் முயங்குமற் றவளை யங்க
ணுடினர் கட்கு மொன்னூர் நவைபுகா நன்மை சாலும். (௫௩)

### வேறு.

மாசித் திங்கள் வளருறு சத்தமி
வீசு நாளில் விளம்பு மறைசையுட்
டேசு மிக்க தினகர னைத்தொழ
நாச மாம்பிணி யாவு நலந்தரும். (௫௪)

### வேறு.

சொற்ற நற்றிரு மன்றினை நினைப்பவர் துதிப்போர்
மற்று மாங்கது காண்பவர் மதிக்குமம் மேன்மை
பற்றி யன்பொடு கேட்பவர் படிப்பவ ருலகின்
முற்று ணர்ந்தவர் யாவரு முத்தரே யாவார். (௫௫)

தேவர்தொழுமன்றச்சருக்க முற்றிற்று.

ஆகச் சருக்கம் கஎ-க்குத் திருவிருத்தம் க0௬அ

---

* மோடிக்குச் சருச்சிகையெனப் பெயர்.

# தீர்த்தமுத்திச்சருக்கம்.



அத்த லந்தனை யமரர்வாழ் மன்றம தாக்கி
சித்தர் மாநடம் புரிந்தமை நிகழ்த்தினம் யாமேற்
சித்தி நல்குமப் பதியது தீர்த்தமே யாட
முத்தி நல்குமென் றறைந்ததி லறிந்தமை மொழிவாம். (க)

வேறு.

முன்னமா லுகந்து நின்று முக்கணன் றன்னைநோக்கி
யின்னலுற் றுழலு மிந்த விருவினை வாழ்க்கை நீக்கித்
தன்னிக ரிலாத முத்தி தனைப்பெறு தற்கு பாய
மென்னென வுகந்து கேட்ப விறையவற் கருள லுற்றான். (உ)

மாயனீ யுரைத்த மாற்ற மலரவன் முனிவர் வானோ
ரேயுமற் றறியா வுண்மை யிசைப்பரி திதன்பான் மிக்கோ
ராயமா ணவர்க்கே யேனு மசலமா மகட்கு நாமுன்
னேயமுற் றேகாந் தத்தி னிகழ்த்துப தேச மீதால், (ங)

அன்னதை நின்பா லன்பா லறைகுவ மாற்றின் முத்தி
யென்னுமற் றதுதான் மாறு திரண்டற விறைவ னோடு
மன்னிநின் றனந்தா னந்த மருவுத லதுமெய்ஞ் ஞானந்
தன்னிடத் துதித்தா லன்றிச் சார்புறா தஃதே சாற்றில். (ச)

பத்திநீள் கிரியை யோகம் பயின்றுநின் றதனுன் மாறு
வத்துவ சுத்தி செய்வித் தறிவரு நாதாந் தத்தி
னித்தனோ டேகந் தங்கான்மா நிகழ்நிலை கண்ட றானே
சத்திய முணர்மெய்ஞ் ஞான மெனமறை சாற்று மாலே. (ரு)

சிந்துவை நாவா யன்றிச் செலவரி ததர்கோ லன்றி
யந்தகன் மாட்டான் போலு மத்துவ சுத்தி யன்றிப்
புந்தியுண் ஞானேற் பத்தி பொருந்திடா ததனுன் ஞானம்
வந்திடு மப்போ தப்போ மருவிடு முத்திவாழ்வு. (சா)

எண்ணரு ஞான மேனி யாகியவிறையை ஞானக்
கண்ணினா லன்றி யூனக் கண்ணினாற் காணொ ணாதான்
மண்ணினும் விளக்கீ டாக வரும்பிறப் பிறப்பாந் துன்ப
நண்ணிடா முத்திக் கேது ஞானமே யன்றி யின்றால். (எ)

வேறு.

வினையெ னுங்கடல் கடப்பதற் குலகின்மெய்ஞ் ஞானந்
தனைய லாதில யஃதுமோ சரிதைகண் முதன்மூன்
றினைவ ருந்திவின் றல்லதெய் தாதவை யியற்றி
யனைய ஞானமுற் றடைகமேன் முத்தியு மரிதால். (அ)

ஆய வாதலா லெளிதினின் முத்தியை யடைதற்
காய வாறுணர்ந் தறைகுவ மறைவனத் ததிக
மாய வாரண வாரிதி யாடிலே யமையு
மாய வாவறு ஞானமேன் முத்தியு மடைவர். (கூ)

வேறு.

செப்பரு மாரூர் தன்னிற் றில்லையிற் காசி தன்னி
லெப்பரி சுதிக்கிற் காணி விறந்திடி லெய்து முத்தி
யப்பரி சுரைத்த வேத வனத்தினீ ராடிற் போது
மொப்பரு முத்தி சார்வ ருரைக்கிலீ துண்மையென்றான். (க0)

இன்னவா றுரைய னுக்கன் றிறையவ னருளு முண்மை
தன்னையா னுங்கட் கன்பாற் சாற்றினன் மறைகள் போற்று
மந்நகர்த் தீர்த்த மாடி யரனடி வழுத்தி முத்தி
மன்னின ரநேகர் தம்முட் சிலர்கதை வகுப்பக் கேண்மின். (கக)

வேறு.

மெய்த்தாபதர் தங்கட்குளம் வேண்டும்வர முதவு
நத்தார்புனல் விதிசைப்பெரு நதியின்கரை மீதே
யுத்தாலக னென்னும்மொரு முனிவன்னுயர் தவமு
னத்தாபத ரொடுசெய்துகொ டங்கண்ணுற வமர்ந்தான். (கஉ)

அமரும்பொழு தவனேங்கணே யணுகாவிர தத்தால்
விமலன்பத வினைவான்றவ மேவும்படி கண்ட
தமராவய லுறைமாதவர் நோக்காதவன் றன்னை
நமர்போலடை வினிவில்லற நணுகல்லது நவிலில். (கக)

மகவற்றவர் மேனற்கதி மருவார்பசு வுதரந்
தகவற்றுட லநிலீன்றன தம்மோடுபி றக்கும்
பகினித்திற மெண்ணுதுபு ணர்ந்தேபகர் நிரயம்
புகநிற்பர்க ளதனுன்மனே யறநீபுகு வென்றார். (கச)

என்றன்னவர் மறைநூல்வழி யீதென்னவு மிசையா
னின்றன்னவ னறமாவது துறவென்றுநி னேந்தே
யொன்றுந்திட விரதத்துட னுறைநாளினி லொருநாட்
கன்றுங்கன வினின்வீரிய மறியாதுக விப்ப. (கரு)

வேறு.

கண்டு பாரில்வீண் கலக்கலா காதெனக் கருத்துட்
கொண்ட வன்னதை யோனியுள் விடுவதாய்க் குறித்தோர்
முண்ட கத்தலர் புகவைத்து மொழிந்தவன் னதியின்
மண்ட ரும்புனல் விடுத்தனன் விடுப்பமற் றதுவும். (கசு)

அன்ன வூர்தியைத் தரித்திடு மருந்தனிக் கமல
மென்ன வாங்கவன் வீரிய மேந்துமக் கமல
மன்னு நீர்வழி கடறுயில் மாதவ னிருக்கை
தன்னை நாடியே செல்வபோற் றுன்செலும்போதில். (களை)

தோன்று நற்பிர தாதர னென்றுசொல் வேந்த
னீன்ற கன்னியாஞ் சுகேசினி யெனுமொரு மாது
தான்ற ருந்துணேப் பாங்கியர் தாதியர் சூழ
வான்ற வந்நதிநீர்புகுந் தாடவென் றணேந்தாள். (கஅ)

அணுகி யந்நதி நீர்புகுந் தாடமேவ் வெல்லை
நணுக வீரியந் தாங்குமவ் வலரதை நாடித்
துணைத ரும்விதி வழிகொடச் சுகேசினி யெடுத்து
மணம ருந்துவான் மோந்தனண் மகிழ்ந்ததி சயித்து. (கசு)

மோந்த போதினின் முனிவனுன் முளரியில் விடுப்ப
வேந்து வீரிய மாங்கவ ளுசியி னிடையே
போந்து சென்றுடன் கருப்பகோ ளகையினிற் புகுத
வாந்தி றந்தெரி யாதவ ணன்னதி யாடி. (உ0)

ஆய வெள்ளமோ டாடியவ் வெள்ளமாங் குகந்து
போய ணைந்தனண் முன்புபோற் புரவலன் கோயிற்
ரூய கந்தனை யன்றவ டாங்குவீ ரியமு
மாய மென்னவே வளர்ந்தது வளர்பிறை மான. (உக)

இன்ன வாறுநா டொறும்வளர் தோறுமிக் கருப்ப
மன்னு நீள்குறி கண்டுள மருண்டட னவட
னன்னை யாயதே சோவதி யாய்ந்தரும் புதல்வி
தன்னை நோக்கியீ தென்னெனக் கேட்டன டனித்து. (உஉ)

கேட்ட போதவள் கேடிலாய் கிளக்கில்யா னறிய
வீட்டு மாறிதிங் கன்றெென வீன்றவள் கேளா
நாட்டி லாம்பழி யென்றுட னரபதிக் கிசைப்ப
வாட்ட முற்றவன் வெகுண்டுளம் போதவு மருண்டான். (உங)

சாத லாற்றினும் பெண்பழிதவிர்ந்திடா தில்ல
மீதி ருத்தினுங் கன்னியா மகப்பெற விளைத்த
போதி னங்குலத் தோர்க்கப வாதமோ போகா
தாத லாலவட் புறம்விட லறமெனத் தெளிந்தான். (உச)

அதுல னும்பழிச் சொல்லுரு தறிவெனு மரத்தாற்
புதல்வி யென்னுமப் பாசமாம் விலங்கினைப் போக்கி
யெதிரின் மாதவத் துற்கட னெனுமுனி தங்கும்
விதமு றுந்தபோ வனத்தவ டனிபுக விடுத்தான். (உரு)

விடுத்த மன்னனு மீண்டிட வெந்துயர் நாண
மடுத்த கன்னியை யருந்தவன் கண்டினி தாற்றி
யெடுத்து நீடருள் புரிந்துதம் புதல்வியென் றினிமை
கொடுத்தி ருத்தினன் றங்குலக் கோதைய ரோடும். (உசு)

விரும்பி யாங்கவ ளிருந்திட விளைந்தவக் கருப்ப
மிரம்பி வந்தெழ முன்புகு நாசியி னெறியே
திரும்ப வீன்றன ளீரைந்து திங்களி லொருசேய்
தரும்பெ ருந்தவ வீரியத் தனிக்களி றென்ன. (உஎ)

வேறு.

கன்னிகை நாசி யானன் மகவினைக் கான்றகாட்சி
யென்னிதென் றதிச யித்துற் கடனெனு மிருந்த வத்தோன்
றன்னருஞ் சமாதி தன்னிற் றக்கவத் தனயன் றன்னை
மன்னுமுத் தால கன்றன் மைந்தனென் றெண்ணிக் கண்டான். ()

வேறு.

கண்ட போதவனம் மைந்தனைப்பெரிது காதல் கூர்தரவ ளர்த்
தெடுத், தெண்டி றற்பெயரு நாசி கேதுவென வீந்து கல்விவரு வித்
தபின், பண்டை முற்றியபி றப்பு ணர்த்தியுயர் பால னைப்பொருவி
றுதைபாற், கொண்டு சென்றவன தேவல் செய்கெனவி டுத்த னன்
குறிகொ ளாவணம். (உகு)

விடுத்த வத்தனய னுந்த னையர்தவ மேவு மாரணிய மேவிமற், றடுத்த மாதவரை முன்ப ணிந்துதன தையர் தாடொழு ததன்பினன், பெடுத்த சித்தமொடு தந்தைதன்னினுமி ருந்த மாதவர்க ளேவுமுன், மடித்தி டாதவர வர்க்கு வேண்டுபணி வாகு செய்துகொடு மன்னி னன். (௫௦)

சீல மாதவர் வியப்ப விப்பரிசு செய்த வர்க்கினிய செய்தொழின், மேலு மீன்றவனு ளங்கொள் வாறொழுகி மேவு நாளிலொரு நாளிலுத், தால னுங்கவனை யார்கொ லென்னவரல் சாற்றி முற்செயல்க டாழ்ந்துபின், பால னுகுமென தன்னை யின்மனைப ரிக்கு மாறு முத வென்றனன். (௫௧)

நாசி கேதுவிவை கூற மாதவனு நாடி முற்செயலை ஞானநீ, டேசு கொண்டவிழி கொண்டு மாங்கதுதெ ளிந்து கண்டு புது மைத் திதென், றுசின் மைந்தனையு கந்து நோக்கிவின தன்னை தன்னையழை சென்றெனுப், பேசு முன்புவிடை கொண்ட வன்றனது பெற்ற தா யரரு குற்றனன். (௫௨)

உற்ற வட்கினிது தாதை சொன்னவையு ரைத்து வாகொலென வன்னைதன், சொற்ற நன்மகவை நோக்கி முன்புலகு சொல்ல வின்ற பழி யன்றியு, மற்று மைந்தவிஃ தேனு மாறிலப வாத மாய்விளைய வேண்டுமோ, பெற்ற தாதையுத வாது கன்னிகைபெ றுங்கொலோ த லைவன் றன்னையே. (௫௩)

வேறு.

வெய்ய நல்குர வாயினு மிகுசெல்வ முறினுஞ்
செய்ய வான்றமர் சேர்கினுஞ் சேர்ந்திடா விடினு
மைய நீர்மணம் புகுத்தினும் மணம்புகா விடினுந்
தைய லார்க்கொரு காலமுந் தமதுமூப் புளதோ. (௫௪)

எந்த நாளினுங் கன்னியாம் பருவமே லீன்ருேன்
வந்து வேட்டவன் வேட்டபின் மூப்புவந் துற்ருன்
மைந்தர் காத்தளித் திடுவது மன்றிமங் கையர்க்காய்த்
தந்தி றத்திலொன் றியற்றினுந் தகும்பழி யுலகில். (௫௫)

தனைய வாதலா லத்தவர் தமக்கெனை யாள
வினைவ ரேயெனைப் பயந்தவ னீதிசேர் மன்னன்
மனைய கத்திலுற் கடனனு மதிகொடு வதுவை
புனைவ தேயறம் போகுமுற் பழியுமப் போது. (௫௬)

என்று ரைத்திட வன்னையப் புதல்வனு மெழுந்து
சென்று தாதைபா லாங்கவள் செப்பிய மாற்ற
மொன்ருெ ழிந்திடா துரைத்தனன் கேட்டட னுகந்து
நின்ற மாதவ னஃதற மாமென நினைந்தான். (௫௭)

நாசி கேதுவை யுடன்கொடுத் தாலக னணுகித்
தேசு லாவுமுற் கடன்றபோ வனஞ்செறிந் தணைந்தும்
பேசி யாங்கவ னுடன்பிர தாதுரன் பெரிய
வாச மாநகர் புகுந்தனன் மன்னவற் காண்பான். (௫௮)

கண்டு வேந்தனை யரசுரை கழறியுற் கடனைக்
கொண்ட வன்றரு குமாரியாஞ் சுகேசினிக் குலகிற்
பண்டை வந்துறு பழிச்சொலின் காரணம் பகர்வித்
தெண்ட ரும்மணத் தவட்பெறத் தனக்கிசைப் பித்தான். (௫௯)

வேறு.

இந்த வாய்மைகள் கேட்ட போதினி வின்று நம்மர போர்க்கெலா
நிந்தை தீர்ந்த தெனத்தெ ளிந்துட னின்ற நீணெறி நிருபனுஞ்
சிந்தை கூர்ந்து தபோவ னத்துறு செய்ய தன்மக டன்னைநன்
மைந்த னேடு முகப்பொ டேகொடு வந்துதன்மனை யின்புறம். (௬௦)

வைத்து நன்மண முரச மன்னனு மாந கர்க்கறை வித்துநீ
டத்த குந்திரு வனைய மாதை யலங்க ரித்தவ ளருடரும்
புத்தி ரன்றன துடனு கந்தவை போற்ற மேன்மையுத் தாலனு
மெய்த்த வக்குரி சிற்க ளித்தனன் மேவு மொக்கல் விருப்புற. (சுக)

செய்ய மாதை மணம்பு ணர்ந்தவுத் தால னுந்திகழ் மன்னவற்
குய்யு மாறுநன் னீதி ஞானமு ணர்த்தி யேவிடை கூறியத்
தையன் மைந்தனோ டின்ப நீடுத போவ னந்தனைச் சார்ந்துபின்
மெய்ய ருந்தவ முன்பு போலவி ரும்பி யங்கண மர்ந்தனன். (சுஉ)

வேறு.

வருந்தி மாதவ மத்தபோ வனந்தனி னெடுநா
ளிருந்து பின்னர்தம் மகவுட னெண்டிசை முழுதுந்
திரிந்து புண்ணிய நதிபல செறிந்துகந் தாடி
யருந்த வந்தரு வதரிகாச் சிரமம தடைந்தான். (சுங)

அத்த போவன மணுகியாங் கமர்ந்திடு மலகின்
மெய்த்த போதனர் தம்முடன் விரும்பியுற் றிருந்து
புத்தி ரன்றன துடனருள் பொழிசிவ ஞான
முய்த்தி டுந்தவ மியற்றிடு நாளினி லோர்நாள். (சுச)

காலை சென்றுநீ ராடியே வியதிகள் கழித்துக்
கோலி மாமலர் சமிதைகள் குசைமுதற் கொணர்ந்து
சால வைத்தரு கடுத்தகோ தாவரி தடத்தின்
மேவி ருந்தினி திருந்தவம் புரிந்தனன் மேன்மேல். (சு௫)

நெடிதி ருந்துபின் னரும்பக னேரமங் கெய்தி
யிடுதல் கண்டட னெழுந்தவ னேகுமவ் விரைவா
லொடித ருஞ்சமி தாதியை யோர்ந்திலன் வைத்துக்
கடிது சென்றன னருச்சனை வேள்விகள் கழிப்பான். (சுசூ

சென்ற ருச்சனைக் காயவை தெரிபொழு துணர்ந்து
நின்ற மைந்தனை நோக்கியான் மறந்தன னீபோ
யொன்ற நன்னதிக் கரையிலோ மாங்கமா யுள திங்
கின்றெ டுத்துடன் வருதியென் றுரல்லையி லேவ. (சஎ)

ஏவு முன்னவ னந்நதிக் கரையினை யெய்தித்
தாவ ருங்குசை முதலிய சமிதைக ளனைத்துங்
காவி ருங்கரைப் புறமெலாந் தேடியுங் காணான்
மேவி மைந்தனுந் தந்தைபால் விளம்புவான் மீண்டான். (சஅ)

தேடி யன்னவை யந்நதிக் கரையெலாந் திரிந்து
நாடி யும்பெறக் கண்டிலே னென்றவ னவில
யூடி யப்பெரும் புதல்வனை யுரைகொடு கனன்று
வாடி வெம்பசி யாற்றளர் மாதவன் சொல்வான். (சகூ)

மன்னு மென்றன தருத்திகண் டேகிய மைந்த
வன்ன தேகினு மருச்சனைக் கயல்கொடு வாரா
தின்ன வாய்மைநீ நவின்றனை யாதலா லியமன்
றன்னை யொல்லைநீ காண்குதி யென்றவற் சபித்தான். (ருo)

சாப மிட்டிடு முன்னவ னுயிர்செலத் தரியா
தாவி தென்கொலென் றத்தபோ தனனவ னுடலைத்
தாவி யங்கைகொ டெடுத்துநீண் மடியினிற் சாய்த்துப்
பாவ மென்னமுன் செய்தன மென்றவன் பகரா. (ருக

விழிகொ ணீர்விடுத் தவ்வுட னனைந்துற மேன்மே
லழிய மாதவ னவன்றுயர் நீக்கவப் புதல்வ
னெழியு மாருயிர் மீண்டுவந் துருத்திட வெழுந்து
தழிய தாதையை நோக்கினன் றுயிறவிர்ந் தவன்போல். (ருஉ)

போய வாருயிர் மீட்சிகண் டடலெலாம் புளகந்
தோய மீளவு மானந்த நீர்விழி சொரிந்து
பாய வார்வமுற் றிருந்தவத் தாதையைப் பார்த்து
நேய விப்பரி சருந்துயர் நிகழ்வரோ மேலோர். (ருங)

நின்னு ளம்பிழைத் திடவொரு தீங்கியா னிகழ்த்த
வின்ன லிப்பரி செனக்குவந் தெய்திய தற்கா
மன்ன ருந்தவ னீதுயர்ப் படுவது வழக்கன்
றுன்ன ருந்திற னீதிநூல் வழிதெரிந் துணரில். (ருச)

மைந்தர் மாணவ ராருயிர் மாய்ந்திடி லவர்க்காத்
தந்தை யாயினர் குருபர ரோதனந் தாங்கி
*லந்த மானவர் வீடுறு ரணுகுவர் நரகென்
றிந்த வாய்மைநீ யறிந்துமித் துயருற வியல்போ. (ருரு)

வேறு.

முன்னநான் செய்த பாவ முறைமையாற் சமிதை யாதி
தன்னையந் நதியுள் வீழ்த்தச் சமீரண னஃதோ ராது
நின்னுளம் பிழைக்க வந்த தாதலாற் றவத்து நீயு
மன்னதென் றெண்ணு தெம்பா லரியவிச் சாப மீந்தாய். (ருசு)

தீதுறு செயலே யேனு நன்னெறிச் செயலே யேனுந்
தாதையர் குரவ ராணை தனயர்மா ணுக்கர் தாங்க
னீதிய தன்றோ வைய நின்றுயர் தவிர்தி மீளப்
போதுற விடைதா நின்னித் துயர்கண்டு போந்த தென்றான். (ருஎ)

மைந்தனிவ் வாறு கூற மாதவன் புதல்வன் றன்னை
யந்தகற் காண்பை யென்று வெகுளிகொண் டறைந்த தல்லாற்
சிந்தையொப் புரைமற் றன்றே யாதலா னெடுநாட் சீவித்
திந்தமெய் யுறைவ தல்லான் மறவியூ ரேக லென்றான். (ருஅ)

---

* அந்தமானவர் = இறந்தவர்.

புகலவிவ் வாறு மீண்டு மாதவன் புதல்வன் ஞானு
மிகவிலா வுயிர்பி ழைத்தங் கெழுந்தவ னடியிற் றாழ்ந்தா
னிகரிலப் புதுமை கேளா நின்றய லருந்த வஞ்செ
யகிலமா தவரு மங்க ணணைந்தன ரவனைக் காண. (ருக)

அன்னவர் வினவி யுத்தா லகனைமுன் ஞாசி கேது
தன்னைமேல் வியந்து மீண்ட சதுரனீ யியம னூர்புக்
கென்னிலங் கறலுண் மூழ்கி யிடர்ப்படு மவரா ரன்றிப்
பொன்னுல குறுவார் யார்கொல் கண்டமை புகல்வா யென்றார்.(சூ0)

மற்றவ ருரைப்பக் கேளா மைந்தனும் வணங்கி யந்த
நற்றவர் தம்மை நோக்கி நவிலுவா னரகங் காக்குங்
கொற்றவ னேவ லாலே சித்திர குத்த னங்கட்
சொற்றவப் பரிசுங் யான்றான் கண்டதுஞ் சொல்வ னென்றான்.(சூக)

ஓதருந் துன்பம் யாவு முறுந்தொழி லிரௌர வந்தா
ஞதியா நரக நாலே ழதனிடை யனந்த பேதம்
போதரு மதன்கண் மாந்தர் பொருந்துதீ வினைக்கீ டாக
வேதனைப் படுதல் கண்ட வாசில விளம்பக் கேண்மின். (சூஉ)

குரவரைச் சிவனை நிந்தை கூறின ரிடையிற் கொண்ட
விரதமே விடுத்தோர் தாமு மிரௌரவ மென்னும் வெம்மை
நிரயமீ தடைவர் தாயைத் தந்தையை நிந்தை செய்த
கரவரோ கும்பி பாக மெனுநர குறுவர் கண்டீர். (சூஙு)

நீளருந் தாபத் தெய்து நிரைபுன லருந்தா வண்ண
மீளுறத் தடுத்த வெய்ய பாதகர் மீள மீளத்
தோளிணை முதலா மங்கந் துணிதர வீசி வீழ்ப்ப
வாளிலை வனமாந் துன்ப நரகிடை வருந்து வாரால். (சூச

மறுமனை யவளை மற்றோர் கணவனை மருளாற் பார்க்கு
முறைதடு மாறு மாந்தர் மாதர்கண் முள்ளாற் சூழ்ந்து
நிறைதரு மிலவிற் சேர்த்து நிமிர்கின்ற நீண்ட துண்டப்
பறவைகள் விழிக டோண்டப் பதைபதைத் திடுவர் கண்டீர். (சுரு)

அயன்மனை யவளை மற்றோர் தலைவனைத் தழுவி யாசை
முயலுறு மாந்தர் மாதர் மூடெரி கொளுந்து லோக
மயமெனும் பெண்ணு ணுரும் வடிவினைத் தழுவி யங்கண்
செயலழிந் தன்னோ வைய வென்றருந் துயரஞ் சேர்வர். (சுசு)

கொன்றிடுங் கொலைக்கஞ் சாத கொடியர்மா ரவுர வந்தா
னென்றிடு நரகிற் றுன்ப மெய்துவ ரெந்த நாளு
மன்றிவஞ் சனைக டன்னு லாருயிர் மாய்த்த பேரு
நின்றருந் துயரஞ் சேர்வர் நிகும்பநீ ணிரயந் தன்னில். (சுஎ)

வறிஞர்நோ யாளர் மற்றும் வழித்துயர் வந்தோர் கேட்பச்
சிறிதுண வேனு மீயாத் தீயருற் கடமென் றோது
மறவிடர்ப் படுவர் செம்பொ னுசையா னடுவொ ரீச்சொன்
னிறுவினர் மூழ்கா நிற்பர் சங்கட நிரய நாளும். (சுஅ)

பெரியரை யபவா தக்கள் பேசினர் பேரா வண்ணஞ்
சொரிதரு மழனின் றோங்கும் வாலுக நிரயந் தோய்வர்
தெரிதரு கன்னி மாரைத் தீயசொற் றெரித்தோர் தாமு
மெரிதரு தயில கும்ப மெனுநர கெய்தா நிற்பர். (சுகூ)

ஒருவனுக் குணவை யீந்தங் கவனுகர் போழ்தி னூடே
சருவிநீ ணிந்தை சொல்வோர் தீக்கடை நிரயஞ் சார்வ
ரிருபிறப் பாளர் மூத்தோர் தந்தைகோ விவர்பாற் றுன்பம்
வருநெறிக் குதவார் தாமு மாகட நரகின் மாய்வார். (எ0)

மற்றவ ரில்லந் தன்னில் வைகிட வருந்த வாசை
பெற்றவர் நாளு மாறு விருளினிற் பிறழு மேனி
யுற்றவெங் கிரயஞ் சார்வர் கோளுரை யொழியாத் தீமை
சொற்றவர் தாமுஞ் சூசி முகமெனு நரகிற் றேய்வர். (எக)

தனதுமாண் புடைய மிக்க தையலை யகற்றி யாசை
புனைதரு மயன்ம டந்தை தோளிணை புல்கு மாந்தர்
வினைதரு மரவுந் தேளு நிரம்புமா கோர மென்னும்
வினைதரு நரகில் வீழ்ந்து துயரினுன் மெலிவர் நாளும். (எஉ)

இன்னன முதலாமற்றப் பாவமென் றிசைத்த யாவு
மன்னின ரதற்கிங் கேற்ற துயர்புக வகுத்து நூலிற்
சொன்னவெண் ணிலாத கோர நரகிடைத் தோய்ந்து நின்று
பன்னெடுங் கால நீங்காத் துயரமே படுவ ரந்தோ. (எங)

வேறு.

பெரிது வல்வினை செய்யினும் பேசுநல் வினையா
னிரய மெய்திடா ரென்பது நிகரில்புண் ணியங்கள்
புரிகி னுஞ்சில பாதகம் புரிந்தவர் பொல்லா
நரக மெய்துவ ரென்பது மறிந்தமை நவில்வாம். (எச)

யாவர் நாடொறு நியதிநின் றியற்றுவோர் தடாகம்
வாவி நந்தன வனம்புக வைப்பவர் மறையோர்
தேவராலய மமைப்பவர் நீர்பந்தர் செய்வோர்
பாவ காரிக ளாயினு நரகவர் பாரார். (எரு)

தீன ரந்தக ரநாதர்நல் குரவினர் சிறுவ
ரூன வாளரைக் காப்பவர் சிவதல முவப்போர்
ஞான மாதவர் தம்வழி நிற்பவர் நவிலி
லீன பாதக ராயினு மவர்நர கெய்தார். (எசு)

### வேறு.

அந்தண ரானி னங்கட் குற்றிடு மரந்தை தீர்ப்போ
ரெந்தையா லயம டங்க டிருவிளக் கேற்றி னோர்கள்
வந்தவீ ருவாவிற் றூய மாநதி யாடி னோர்கள்
வெந்திறல் வினைஞ ரேனு நரகவர் மேவி டாரால். (எஎ)

### வேறு.

முன்ன ருத்தியா வினுக்குண வதன்பினுண் மூத்தோ
ரன்ன மெண்ணெய்பா றிலந்தனி வியன்றன வருள்வோ
ரின்ன லெய்தினர்க் *கிற்கலை கார்பனிக் கீவோர்
மன்னு பாதக ராயினு நரகவர் மருவார். (எஅ)
அலது மங்கையர் பூண்முலை யுவாவினி லணைவோர்
கலவி மீதயன் மடந்தையை விரும்பியே கலந்தோ
ருலகி லன்னியர் பொருள்கவர் படிறரு முரைக்கி
லிலகு புண்ணிய ராயினு மிவர்நர கிழிவார். (எகூ)
கோதில் வாவிகள் குளங்கிண றரும்பொழில் குலைப்போர்
சீத வார்புனற் பந்தர்க ளூரிடஞ் சிதைப்போர்
வேத பாரகர் பசுக்களுக் கருந்துயர் விளைப்போ
ரோது புண்ணிய ராயினு முவர்நர குறுவர். (அ0)
பதிதர் பாசண்டர் தங்களைப் பாலனஞ் செய்வோர்
முதிரு மாகம குரவரை நிந்தனை மொழிவோர்
மதிகொ டாருயிர் வதைத்தவர் வஞ்சக மனத்தோ
ரதிக புண்ணிய ராயினு மவர்நர கடைவார். (அக)
இந்து வெங்கதி ருறுமுவா வெண்ணெயா மலகந்
தந்த தாவனம் பரான்னமூன் சார்பவ ரில்பேர்க்
கந்த மின்மறை பயில்பவ ருலோகம்விற் பவரு
முந்து புண்ணி யராயினு மூழ்குவர் நிரயம். (அஉ)

---

* இல் + கலை = வீடு, வஸ்திரம்.

### வேறு.

பொன்னுல கேறு மாந்தர் புகும்வழி வினவி லெங்கு
மன்னசா லைகணீர்ப் பந்தர் மாளிகை யாரா மங்கள்
பன்னுசா மரைகள் யானம் பரிமளங் கவிகை தாள
மென்னவேண் டினுமற் றெல்லா மெளிதினி லவர்க்கங் கெய்தும்.

நரகினை யடையு மாந்தர் செல்வழி நவிலிற் பள்ள
மொருபுடை மேடு முட்கா டழல்பொதி யோடை பக்கஞ்
சருவுதீ விலங்கு வெய்ய மணல்பர லாறு தாக்க
வரவுதே ளாதி தூதர் வாதையி லழுந்தா ரிற்பர். (அச)

### வேறு.

வைதரணி நல்வினைஞர்க் கெதிரே சீத வாரிவிடுத் தவர்முன் னம் வழங்கு கோலங், தெய்தவெளி ததுபுணையா யேற்றுவிக்கு மிகழ்வினைஞர் தமைக்காணி லெறிகல் லோலம், பெய்ததிர்நீர்ச் சுழி பரப்பி யெழுந்தகோரப்பெருமகரங் கராவரவு பிறழவாதை, செய்தி யமதூதரவர் தம்மை வீழ்த்திச் சீறிமிகுந் துயர்ப்படுத்தி யேறச்செய் யும்.

### வேறு.

தரும சீலரைக் கண்டிடிற் சமனெதி ரெழுந்து
திரும ணித்திரள் விமானமீ தேற்றிவிண் சேர்ப்ப
னருகு தீவினை யவர்முகம் பாரலென் றகற்றி
வெருவு றும்படி விரிதுயர் நரகிடை விடுப்பன். (அரு)

நாசி கேதுவு மிவ்வண நவிலமா தவரு
மாசி கூறியங் கவன்றனை வியந்துசென் றகன்றார்
மாசின் மைந்தனுந் தாதையை வணங்கிமா முத்தி
பேசு மிவ்வினை யொழிந்தியான் பெறுவதென் றென்றான். (அள)

என்ற போ திலுத் தாலனு மினிதுகந் தவனை
நன்று நோக்கிநீ புகன்றமை நன்றது நவிலிற்
றுன்று நீள்வினை யோகபா வனைகொடு துடைத்தா
லொன்றி டுஞ்சிவ ஞானமு முத்தியு முறுமால். (அஅ)

இத்தி றத்தரி தியற்றினு லெய்துமம் முத்தி
யத்தர் வாழ்மறை வனத்துநீ ராடவா மெளிதின்
முத்தி சேர்வகை யீதியான் மொழிந்ததன் றுலகின்
மெத்து நான்மறை சிவாகமம் யாவையும் விளம்பும். (அகூ)

எனவு ரைக்கவத் தாதைகேட் டின்பமுற் றந்தத்
தனய னும்விடை கொண்டுமா மறைவனஞ் சார்ந்தங்
கனைவ ரும்புகழ் தீர்த்தமீ தாடினனெழுந்து
வினையு முன்னுளத் துதித்தது விகரின்மெய்ஞ் ஞானம். (கூ0)

நாசி கேதுவுஞ் சென்றுட னுன்மறை வணங்கு
மீச னைப்பணிந் தாங்கிருந் திகலின்மெஞ் ஞானத்
தேசு கொண்டறுத் தாணவ வழுக்கினைச் சிந்தை
யாச றும்பர மானந்த முத்தியை யடைந்தான். (கூக)

மெய்த்த போதன ரருள்கொடு விடுத்துமுன் காதி
புத்தி ரத்துவம் பூசுர னுகினா ரதனுஞ்
சித்தி வேண்டுவ பெறுவமெய்ஞ் ஞானியாய்ச் சீவன்
முத்த ரானது மத்தலம் புனைந்துநீர் மூழ்கி. (கூஉ)

வேறு.

இந்த நற்பதி யாக்கிய வாக்கரும்
வந்து வாவில் வணங்கிநீ ராடியே
யெந்தை ஞானமு மெய்தி முனிவருண்
முந்து முத்தி முதல்வரு மாயினர். (கூரு)

கோதின் மைத்திரி கூறுபாற் கேயியென்
ரோது மாதர்க ளோரிரு வர்க்குமுன்
றீத கற்றிச் சிவாநு பவந்தரு
போத முத்தி புகுத்திய தித்தலம். (௧௪)

மற்று மெண்ணில் வருணன் சுவேதகே
துற்ற மாதவ மோங்கு பிருகுவு
முற்று மிப்பதி மூழ்கி யரனருள்
பெற்று முத்திப் பெரும்பதி மூழ்கினர். (௧௫)

**வேறு.**

மைப்ப டியிந்த வேத வாரிசூழ் மறைவ னத்துட்
செப்பிய தீர்த்தந் தன்னிற் சென்றுசென் றாடியீசன்
மெய்ப்பதங் கண்டு ஞான மேவிமுன் னின்ப முத்தி
யிப்படி யடைந்த பேர்க ளெண்ணிடி லெண்ணி லார்கள். (௧௬)

**வேறு.**

எத்தி றத்தின ராயினு மாதலா லெய்தி
யத்த லத்துநீ ராடின ரறுதியாய்ச் சீவன்
முத்த ராவர்க ளீதரன் மொழிந்ததே யன்றி
யொத்து ணர்ந்துமற் றொருவரா லுரைத்ததன் றுலகில். (௧௭)

முறைதெ ரிந்துயா னின்னவா றறிந்தமை மொழியிம்
மறைசை யம்பதி மேன்மையை மாதவ ரவைமு
னிறைவ ராலயத் தாயினு மிருந்தினி திசைப்போர்
நிறைத ரும்புகழ் பெற்றருங் கயிலையை நிகழ்வர். (௧௮)

வேத கானன மேன்மைகள் விளம்புமிப் புராண
மோது வோர்தமை யருச்சனை செய்துகந் தொழுகிக்
கோதில் செம்பொனிட் டாடையா பரணமுங் கொடுப்போர்
தீத கற்றிநின் றரனருள் சேர்வரீ துண்மை. (௧௯)

வேறு.

அந்தமின் மறைசை மேன்மை யறையுமிப் புராணந் தன்னைப்
புந்திகொண் டசுத்த மாய பூதலத் திருந்து கேட்போர்
சிந்தைகொண் டுரைப்போர் மற்றுஞ் செப்புமிம் மேன்மை தன்னை
சிந்தனை செய்வோர் தாமு மெய்துவர் சிரயந் தன்னே. (௧௦௦)

வேறு.

இந்ந லந்தரு மேன்மையை நாடொரு மிசைப்போர்
நன்ன லங்கொடு கேட்பவர் நாடின யாவு
மன்னி சிற்பரீ துண்மைமா மறைவன நாதன்
முன்னி ருந்திஃ துரைப்பவர் முத்தரே யாவர். (௧௦௧)

முந்து புண்ணிய காலமிம் மேன்மையை மொழிவோர்
சிந்தை கொண்டது கேட்பவர் திங்களொன் றங்கண்
வந்து வைகிய பயன்றனை மருவுவர் மாய்ப்ப
ரெந்த வல்வினை யாயினுங் கேட்பவ ரிசைப்போர். (௧௦௨)

முற்று மாமறை யாகம புராணமூ வாறுங்
கற்று ணர்ந்துகேட் டிடும்பயன் றன்னினுங் கருதிற்
சொற்ற விப்பதி மேன்மையைச் சொல்பவர் கேட்போர்
பெற்றி டும்பய னதற்கிது கோடியாம் பேசில். (௧௦௩)

வேறு.

மறைசையம் புராணந் தன்னை வழுத்துவோர் சாலோ கத்தி
லுறைகுவ ரெழுதி வைப்போ ருறுவர்சா மீப மிந்த
முறையினைப் படிப்போர் சார்வர் முயங்குசா ரூபங் கேட்போ
ரிறையொடொன் றுகி சிற்கும் பதத்தினை யெய்தா சிற்பர். (௧௦௪)

வாழிவே தாக மங்கண் மனுநெறி நாளும் வாழி
வாழிமா ஞால முற்று மாமழை பொழிக வாழி
வாழியா னிரைக ளெங்கு மாதவர் கணங்கள் வாழி
வாழியஞ் செழுத்தும் வாழி வளர்தரு சைவம் வாழி. (௧௦௫)

திருச்சிற்றம்பலம்.

தீர்த்தமுத்திச்சருக்க முற்றிற்று.

---

ஆகச் சருக்கம் ௧௮-க்குத் திருவிருத்தம் ௧௧௭௬.

வேதாரணியபுராண முற்றிற்று.



# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨௯ | ௮௬ | ௪ | வருமுறை | வருமறை |
| ௰௨ | ௯ ௰ | ௧ | கொத்தள | கொந்தள |
| ௩௯ | ௪௩ | ௧ | குலகுன் | குலகுண் |
| ௪௧ | ௫௩ | ௧ | பல்களை | பல்கலை |
| ௫௰ | ௩௮ | ௪ | மென்ப | மென்பெ |
| ௫௭ | ௩ | ௪ | வாமுஞ் | வாழுஞ் |
| ௮௮ | ௪௯ | ௨ | வட்பா | வடபா |
| ௯௪ | ௰௮ | ௩ | சென்ற | சென்று |
| ௱௨௰ | ௪ | ௩ | காட்டு | ரோட்டு |
| ௱௩௪ | ௨௬ | ௧ | ண்டமா | நீண்டமா |
| ௱௫௩ | ௯௪ | ௪ | நின்றனள | நின்றனள் |
| ௱௬௫ | ௱௬ | ௧ | தலந்தினி | தலந்தனி |
| ௱௭௰ | ௨௨ | ௧ | துயல் | துயில் |
| ௱௮௫ | ௨௰ | ௧ | வானந்த | வனந்த வானந்த |

## இப்புத்தகம் வாங்க விரும்புவோர்

ம-௱-௱-ஸ்ரீ சோம-கணபதி பண்டாரம் அவர்கள்
மேலவீதி, வேதாரணியம்.

ம-௱-௱-ஸ்ரீ அரு. ச. அருணாசலச்செட்டியார் அவர்கள்
தேவகோட்டை.

ம-௱-௱-ஸ்ரீ மு. சோம-சோமசுந்தரச் செட்டியாரவர்கள்
தேவகோட்டை.

ம-௱-௱-ஸ்ரீ வயி. கும. நாகப்பசெட்டியாரவர்கள்
தேவகோட்டை.

மேற்கண்டவர்களிடத்திலும், வேதாரணியம் பிரதோஷ மடம் மானேஜரிடத்திலும் விலைக்குப் பெற்றுக் கொள்ளலாம்.

இப்புத்தக விற்பனையினால் வரும் இலாப ரூபாயை வேதாரணியம் பிரதோஷ மடத்தின் தருமபாலனத்தின் பொருட்டு உபயோகிக்கப்படும்.

இங்ஙனம்
மா. சோமாஸ்கந்தபட்டாரகர்,
பிரதோஷமடாதிபர்,
வேதாரணியம்.